# புதிய தெய்வம்

ஆசிரியர்

'எழுச்சிக் கவிஞர்'

**வ.கோ. சண்முகம்**

தொகுப்பாசிரியர்

**எஸ். ராஜகுமாரன்**

அணி

புதிய எண்.14, சிவாஜி தெரு,

தி.நகர், சென்னை - 600 017.

புதிய தெய்வம்
Pudiya Dheivam

ஆசிரியர் - வ.கோ. சண்முகம்
Author - Vaa.Ko.Sanmugam

தொகுப்பாசிரியர் - எஸ்.ராஜ குமாரன்
Compiling Editor - S. Raaja kumaran

கவிதைக் குறுநாவல்
Poetic Novel

பதிப்பாளர் - ஆர்.பரிமளா
Publisher - R. Parimala

முதற்பதிப்பு - 1978 / மறுபதிப்பு - 2007
First Edition - 1978 / Re-edition - 2007

பக்கங்கள் - 64 / விலை ரூ. 33/-
Pages - 64 / Price Rs. 33/-

ஒளி அச்சு - தமிழ்க்கூடம், சென்னை - 17.
Lazer Typeset - Thamizkkuudam, Chennai - 17.

நூல் வடிவமைப்பு - இரா. செல்வசுந்தரம்
Book Design : R.Selvasundaram

மேல் அட்டை வடிவமைப்பு - சித்தன் கலைக்கூடம்
Wrapper Design : Sithan Kalaikkoodam, Chennai - 17.

வெளியீடு - அணி
புதிய எண்.14, சிவாஜி தெரு, தி.நகர், சென்னை - 600 017.
**Publisher**
**ANI,** New No.14, Sivaji Street, T.Nagar, Chennai -17.
Mobile : 98401 24602



தமிழறிஞர் நூல்கள் நாட்டுடைமை திட்டத்தின் கீழ்,
2007-2008 தமிழகஅரசு நிதிநிலை அறிக்கையின் வாயிலாக
'எழுச்சிக் கவிஞர்' மாவெண்கோ என்ற
வயலூர்சண்முகம் அவர்களின் நூல்களை நாட்டுடைமை
ஆக்கிய தமிழக முதல்வர்
'முத்தமிழறிஞர்' டாக்டர் கலைஞர்
அவர்களுக்கு நன்றி!

'எழுச்சிக் கவிஞர்'
# வ.கோ. சண்முகம்
# வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வ.கோ. சண்முகம் |
| புனைப்பெயர்கள் | : | மாவெண்கோ, செம்மல், வயலூர்சண்முகம் |
| பிறப்பு | : | 20.02.1924 |
| பிறப்பிடம் | : | வயலூர் கிராமம், திருவாரூர் மாவட்டம் |
| பள்ளிக்கல்வி | : | போர்டு ஹை ஸ்கூல் - திருவாரூர் |
| கல்லூரிக்கல்வி | : | இண்டர்மீடியட், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் - சிதம்பரம் |
| படைப்புகள் பிரசுரமான பத்திரிகைகள் | : | முரசொலி, திராவிட நாடு, அறப்போர், கலைக்கதிர் |
| | : | பிரசண்ட விகடன், கண்ணன், விஜயா, தமிழ் சினிமா, கல்கி, கோகுலம், ஆனந்தவிகடன், மாதஜோதிடம், பால்யன் |

கவிதைகளின் காலம் : மரபுக் கவிதைகள் -
1940 முதல் 1980 வரை
புதுக்கவிதைகள் -
1970 முதல் 1980 வரை

நூல் விவரம் : 1.தெற்கு ஜன்னலும் நானும்
(மரபு மற்றும் புதுக்
கவிதைகள் தொகுப்பு)

: 2.டாணா முத்து
(சிறுவர் கதைப் பாடல்கள்)

: 3. சின்னப்பூவே மெல்லப் பாடு
(குழந்தைப் பாடல்கள்)

: 4. எதைத் தேடுகிறாய்?
(தத்துவக் கவிதைகள்)

: 5. நடந்துகொண்டே இரு
(இளைஞர் கவிதைகள்)

: 6. மெழுகுச் சிறகுகள்
(மரபுக் கவிதைக் கதைகள்)

: 7. புதிய தெய்வம்
(புதுக்கவிதை நாவல்)

: 8. அன்னை ஒருத்தி
(அஷ்டலட்சுமி காவியம்)

: 9. உப்பு மண்டித் தெரு
(புதுக்கவிதைச் சிறுகதைகள்)

: 10. வென்றார்கள் நின்றார்கள்
(பல்துறை சாதனையாளர்கள் பற்றிய
கவிதைகள்)

: 11. தைப்பாவாய்
(மொழி, பண்பாடு சார்ந்த கவிதைகள்)

: 12. பாருக்கெல்லாம் பாரதம்!

| | |
|---|---|
| இலக்கிய நண்பர்கள் | : தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்,<br>'உவமைக் கவிஞர்'சுரதா,<br>கவி.கா.மு.ஷெரீஃப்,<br>திரைப்பட வசனகர்த்தா ஆரூர்தாஸ்,<br>'டார்ஃபிடோ' ஜனார்த்தனன்,<br>திரைப்படத் தயாரிப்பாளர்<br>இராம.அரங்கண்ணல்,<br>'சின்னக்குத்தூசி' தியாகராஜன் |
| இறுதி வாழ்வும் மறைவும் | : 23.07.1983<br>: தளத்தெரு கிராமம், காரைக்கால் (புதுச்சேரி மாநிலம்) |



# பதிப்புரை

'எழுச்சிக்கவிஞர் வ.கோ. சண்முகம் எழுபதுகளின் காலகட்டத்தில் எழுதிய, இந்த புதுக்கவிதைக்கதை நூல் சற்றே வித்தியாசமான - புரட்சிகரமான கதைக்களத்தைக் கொண்டது.

சமூகத்தின் கீழ்மட்டத்தில், பலராலும் வெறுக்கப்படும் ஒரு பெண் கதாபாத்திரத்தை மையப்படுத்தி இந்த நீண்ட கதைக் கவிதையை வயலூர் சண்முகம் வார்த்திருக்கிறார். இந்த வடிவத்திற்கு அவர் 'கவிதைக்குறுநாவல்' என்றும் பெயர் சூட்டியிருக்கிறார்.

புதிய உவமைகள், புதுப்புது சொல்லாக்கங்கள் என்று புதுக்கவிதையின் புத்துணர்ச்சி மிக்க கூறுகள் இந்தக் கதை முழுவதும் மின்னல் விதைகளைப் போல் தூவப்பட்டுள்ளன.

வ.கோ. சண்முகம் சிறந்த மரபுக்கவிஞர். புதுக்கவிதையிலும் அவர் முத்திரை பதித்துள்ளார் என்பதை முரசறையும் வண்ணமாக விளங்குகிறது இந்தக் கவிதைக் கதை நூல்.

ஆற்றல் மிக்க ஒரு மூத்த கவிஞரின் இந்தப் படைப்பை வெளியிடுவதில் 'அணி' பேருவகை கொள்கிறது!

அன்புடன்
ஆர்.பரிமளா

# புதிய தெய்வம்

சிவப்பு விளக்குச்
சீமையின் ராணி!
உவப்புடன் சதையால்
உபகாரம் செய்பவள்!
இரவு முழுதும்
பகலிலும் கூட
இரவல் எச்சிலால்
சொந்த உதட்டை
ஈர மாகவே
வைத்திருப்பவள்!
ஓர விழிகளால்
பேரம் செய்பவள்!

ஒருசாண் நீள
ஒரே ஒரு உறுப்பினால்
வாழ்வை நரகமாய்
ஆக்கிக் கொண்டவள்!
ஆவிநேர் கற்பை
நீக்கிய பாவத்தால்
நித்தமும் வாழ்பவள்!
மற்ற வருக்காக

மல்லாந்து படுத்தும்
சற்றே தனக்காய்ச்
சாய்ந்து படுக்க
நேரமும் வேளையும்
தேடிச் சோர்பவள்!

பாரமாய்க் காமக்
கழுகுகளைச் சுமப்பவள்!
அசிங்க வித்தைகள்;
ஆபாசக் கலைகள்;
கசப்பை ருசிக்கும்
சூத்திரம் கற்றவள்!
கூடத்தில் மின்னும்
குத்துவிளக் கல்ல!
மாடத்தில் எரியும்
மண்விளக் கனையாள்!

நாளொரு நாயகன்!
பொழுதொரு புருஷன்!
ஆள் தொகை வகைப்படி
அவள்வரு மானம்!
படுக்கை அறைய
அவள் பணி மனையாம்!
நடக்கும் போதவள்
நளினமே தனிதான்!
அணைத்ததும் இயங்கும்

மனித இயந்திரம்!
பிணைத்தால் ரதியாய்
அவதாரம் எடுப்பாள்!

"சர்க்கரைச் சிலைசார்
அந்தச் சரஸி!
நிற்கும் இடமெலாம்
நிலாவ டிக்கும்!"
என்றே புகழ்வார்
அவள்ர சிகர்கள்!
குன்றதும் அருவியைக்
குறைத்தா பேசும்?
அனுபவ சாலிகளுக்கே
அவள் ஒரு விருந்து!

விருந்தினால் புதுப்புது
வித்யாசம் படைப்பாள்!
அறியோர் வந்தால்
அகரம் தொடங்கி
அனைத்தும் பழக்குவாள்!
சான்றிதழ் வழங்குவாள்!
அதனால் அவள்பெயர்
அந்நகர் எங்கிலும்
பதியாத இடமே
பாக்கி இல்லை!

வேளைக் கொரு வித
ஒப்பனை செய்வாள்!
பாளைச் சிரிப்பும்
தாளக் குமிழ்களும்
சுருங்கியதே இல்லை!
தொய்ந்ததே இல்லை!
நெருங்கும் பொழுதிலும்
விலகிய போதும்
நேத்திரம் நெஞ்சில்
சித்திரமாய் நிற்பாள்!
சாத்திரப் புத்தியும்
அத்தாசிக் குண்டு!

அவளது ஜாதக
அமைப்பில் கேது
தவறாய்ச் சுக்கிரனுடன்
சேர்ந்து இருந்ததும்
சப்தம பாவத்தில்
சனிபோய் அமர்ந்ததும்
தப்பித மாகத்
தகாத வழியில்
அவளைத் தள்ளியதாய்
அங்க லாய்ப்பாள்!
தவளைக்குக் கூட
ஜாதகம் உண்டென்பாள்!

பாவம் தொலைக்கவும்
பொல்லா சனியின்
கோபம் குறைக்கவும்
சனிக்கிழ மைகளில்
எண்ணெய் முழுக்குத்
தவறாது செய்வாள்!
கண்களில் பட்டக்
'கிராக்கி'களை விடுத்தும்
பக்கத் திலிருந்த
துர்க்கைக் கோயிலில்
நெக்குருகப் புலம்பி
நெய்தீபம் போட்டு
அன்றைய இரவில்
அவ்வா லயத்தை
ஒன்றிய திடலில்
ஒண்டியாய் படுத்துக்
கழிப்பாள்! களிப்பாள்!

காற்றை மழையைப்
பழிப்பவர் தம்மைப்
பொருட்படுத்த மாட்டாள்!
காலையில் ஒரு 'கப்'
மாலையில் ஒரு 'கப்'
சாலைக் கடையில்
'ஏலக்காய் சாயா'

மட்டுமே குடித்து
மீதிப் பொழுதை
பட்டினி கிடந்தே
விரதம் செய்வாள்!

சனிக்கிழமை மட்டும்
இனிக்கும் இல்லறத்
தனிக்குலக் குடும்பத்
திருமகள் போல
அடக்கம் ஒருக்கமாய்
அமைதியாய் நடப்பாள்!
உடுக்கும் உடையும்
உசத்தியாய் இருக்கும்!
நூறு இரு நூறு
விலைமதிப் புள்ள
ஆறேழு கஜத்தில்
அகல ஜரிகைக் கட்டம் போட்டக்
கவர்ச்சியாய் உள்ள
பட்டுப் புடவையை
பாங்காய் உடுத்துவாள்!

முதல்நாள் வசூலில்
மிச்சம் இன்றி
எதிர்ப்படும் யாசகர்க்கு
ஈந்தே மகிழ்வாள்!
எள் மிட்டாய் வாங்கி

ஏழைப் பிள்ளைகளுக்கு
வள்ளல்போல் கொடுத்து
வாரித் தழுவுவாள்!
ஏழு நாட்களில்
சனிக்கிழமை மட்டுமே
'வாழும் நாளாய்'
தன்னுள் மதிப்பாள்!

சரஸி வழிபடும்
துர்க்கைக் கோயிலின்
அருகே இருந்த
ஆத்மிக சமாஜம்
பொன்விழாக் கொண்டாடப்
பந்தல் போட்டது.
அரசராய் இருந்தோர்;
அமைச்சராய் இருப்போர்;
சினிமா விண்மீன்;
சீமான்கள் எல்லாம்
பனிவிழும் இரவிலும்
பந்தலில் நிரம்பினர்!

கீதை, கிரந்தம்,
குர்ஆன், பைபிள்
வேதங்கள் அல்லாம்
ஓதப் பட்டன!
கருத்த ரங்கில்

"கடவுளைக் காப்போம்!
பெருத்தது நாத்திகம்!
பேய்த்த னங்கள்!
'இல்லை' கோஷமே
இன்றிருப்ப தெல்லாம்!
தொல்லை கொடுப்போர்;
துவேஷக் காரர்
சாஸ்திர விரோதிகள்
சதிகள் ஒழிய
நாஸ்திகர் யாவரும்
நாடெங்கும் கூடி
அகண்ட யக்ஞம்
ஆராதனை செய்வோம்!
மிகவும் அவசரம்!"
என்றனர் பலரும்!

'தூக்கு மேடை'
உத்தரவு போடும்
நீதிபதி ஒருவர்
நாக்கு அசைத்து
"ஈஸ்வரன் என்பவன்
ஈயாய்; எறும்பாய்
வாஸ்தவ மாகவே
வாழ்பவன்! அதனால்
ஜீவ நேசமே தேவநேசமாம்
நோவு தீர்க்கும்

சேவையே தேவை!"
என்று முழங்கி
இறங்கிப் போனார்...

"அக்கார வடிசலில்
அப்பளம் போளியில்
சர்க்கரை லட்டில்
சப்பாத்தி குருமாவில்
இடம் வலம்மேல் கீழ்
இன்றி இருப்பவர்
கடவுளே அன்றோ?
காண்போம் இதனை!"
என்று காட்பரீஸ்
குரலில் பேசி
நின்ற படியே
விடையும் பெற்றார்
நகரின் தங்கும்
விடுதிக் காரர்!

வழக்குரைஞர் ஒருவர்
வந்தார் மேடைக்கு!
கிழக்கையும் மேற்கையும்
கிழித்துப் போட்டார்!
"'சட்டம் என்பதே
சர்வேஸ்வரன் குரலாம்!
'கட்டாய பக்தி'

சட்டமா னால்தான்
'நானூற் றிருபது
நபர்கள்' ஒழிவார்!
தேனூற்றால் எரிமலைத்
தீதான் அணையுமா?"
என்று விளாசினார்!

அப்படிப் பலரும்
அன்றைக் கேனும்
ஆண்டவனைக் காக்க
ஆரவாரமாக
ஆவேசம் காட்டினர்!
மற்றோர் உற்றோர்
மகிழ்ந்துகை தட்டினார்!
கருத்தரங்கு முடிந்தது
காரசாரமாக

சிரித்திடும் பங்காய்
கவியரங்கம் அடுத்து:
மாலைச் சுமையால்
கழுத்து இறுக
ஓலைப் பந்தலின்
உச்சியில் தோயும்
ஆஜானு பாகுவாய்
அரங்கில் ஏறிய

ரோஜா மேனிக்
கவிஞர் முழங்கினார்!
“அல்ட்ரா மாடர்ன்
இன்ஸ்ப்ரேஷன் இல்லை!
கல்ச்சுரல் லைஃபே
கம்ப்ளீட்டாய் குளோஸ்!
கடவுள் கடவுள்
என்றால் அவன் யார்?
மடையர்கள் தின்னும்
மசால்வடைச் சரக்கா?

மனிதன் சிரித்தால்
மகேஸ்வரன் ஆவான்!
புனிதன் காந்தியின்
பொக்கைச் சிரிப்பில்
கடவுளின் ஜாகையைக்
காண வில்லையா?
நடைமுறை சமூகம்
நலமுற வாழ
தேசமே தெய்வமாய்
தினமும் துதிப்போம்!
தூசைத் துடைத்த
இதயம் தேடுவோம்!”
என்றே கவிதையை
இசைத்து படித்தார்!

அடுத்தொரு கவிஞர்
அபிநயம் பிடித்தே
கடைத்தெரு மொழியில்
கடகட வெனவே
அடுக்கினார் கவிதை
அவியல் கூட்டை:
"தடுக்கி விழுந்தால்
'குவா குவா' தானோ?
கடைசிப் பிள்ளையே
கடவுள் என்பேன்!
படைப்புளை - நமது
படைப்புக ளைத்தான்
சொல்கிறேன் - இன்றே
சுருக்கக் கொண்டால்
நல்லது என்பேன்!
நாகரிகம் என்பேன்!
வயல்களில் தரிசு!
வயிறெலாம் புதுசா?
கயல் விழித் தாய்மார்
கவனிக்கட்டும்!
என்று முழங்கி
இறங்கி விட்டார்!

நின்றதால் இரைத்தது
அவர்நெடு மேனி!
அடுத்த தாக

அரங்கில் வந்தவர்
மிடுக்காய் தனது
கடுக்கன் ஜொலிக்க
"கயிறு தேடுறான்! - இப்போ
கயிறு தேடுறான்! யாரு?
வயிறு பெருத்தப் பிள்ளையாரை
வாட்ட மின்றிப் பெத்தவன்!- கழுத்தில்
மாட்டிச் சாக மொத்தமாய் ? ஒரு
கயிறு தேடுறான்! கயிறு தேடுறான்!"
என்றே பாடி
ஆடி அழுதார்!
சென்ற இடமெலாம்
கவிதையாய் அழுவது
வாடிக்கை யான
வேடிக்கை அவருக்கு!

பீடிகை போட்டே
பண்டித வித்வான்,
பவனந்தி முனிவரின்
பாட்டன் போன்றவர்
அவர்வந் துற்றார்
ஆலாப னையுடன்:
"வென்றிதெழ அயிலோன்றன்
அருட்டி றத்தை
விதந்து நனி நெக்குருக
போற்றல் செய்வோம்!"

என்றி ழுத்தே
அருஞ் செய்யுள் பலப்பல
அவையில் வைத்தார்!

“நாப்பண் - நாப்பண்”
கடவுளர் பற்றியும்
கபாடபுர பாணியில்
இடைஇடை யே
ஏதோ கழன்றார்!
கடவுளே அதனால்
களைத்துப் போவான்!
முடவன் ஓடிய
‘ஒன்மைல் ரேஸ்’ அது!
கவியரங் கின்பின்
காலட் சேபம்;
அவியல் நிகழ்ச்சிகள்;
அமைச்சர் பேருரை
அடுத்தே நிகழ
இருந்தன. வெளியே
எடுப்புக குரலில்
ஒலிப்பெருக் கியதனில்
நெஞ்சை யள்ளி
நெடுந் தொலைவிலும்
கொஞ்சிய காற்றுடன்
கூடிக் கரைந்தே
“ஒன்றையே நினைத்திருந்து

ஊருக்கே வாழ்ந்திருக்கும்
உத்தமர்க்கோர் ஆலயம்!"

கனிந்து குழைந்து
கடவுள யாரென
துணிந்த டையாளம்
சுட்டிக் காட்டிற்று
திரைப்படப் பாடல்!
தெளிந்த தமிழில்
கரையும் கற்கண்டாய்
கடவுள் தத்துவம்!

பந்தலின் முகப்பில்
பாலத் தெதிரில்
வந்தபிர முகர்களின்
வாகன வரிசை
இம்பாலா, ஃபீயட்
அம்பாஸிடர், ஷவர்லேட்
வம்சங்களின் அழகிய
அம்சங் களையே
கண்டுகளித்துக் கொண்டிருந்த
சிண்டு முண்டு
சிறுவர் களிடையில்
ஆடிட்டர் காரின்
ஓட்டுநர் தினகர்
பீடி குடித்துப்
பேசிக்கொண் டிருந்தான்.

எள்மிட்டாய் ஒன்றை
தினகரி டத்தே
குள்ளச் சுப்பன்
என்பவன் கொடுத்தே
“சாப்பிடு அண்ணே!
சரஸி அக்கா
கூப்பிட்டுத் தந்தது!”
என்று கூறினான்
சட்டென அவனின்
நினைவுகள் அந்தியில்
பட்டுப் புடவை
பளபளப் போடு
துர்க்கைக் கோயிலின்
பக்கம் போன
சர்க்கரைக் குட்டி
சரஸிமேல் மொய்த்தன!

‘நாளை இரவு
நமது ஷிப்ட்டு
சூளைக் கரையில்!”
என்று தனக்குள்
முடிவு எடுத்தவன்
முணுமுணுக்கத் தொடங்கினான்.
“படைத்த கடவுளையே
பாது காக்கப்
பொன்விழாக் கமிட்டி

பூப்பந் தலுக்குள்
என்னமாய் ஐமுக்கு
செய்யு தப்பா!"

காப்பவனே இன்று
காக்கப் படுகிற
ஆர்ப்பாட் டங்களால்
தினகர் கசந்தான்!
சமாஜ சங்கதிகள்
அவனுக்கு ஒவ்வாமை!

அமாவாசை யதனிலும்
நிலவு காண்பவன்!
ஆறுநாள் 'பாவ
அறுவடை' எல்லாம்
'ஒருநாள் பக்தி' யால்
கழுவும சரஸியின்
நோக்கின் தூய்மையை
தினகர் உணர்ந்தான்!

போக்கைக் கேலியாய்ப்
புறக்கணிக்க வில்லை!
சரஸியே உயர்ந்தவள்!
பந்தல் தாழ்ந்தது!
கரிசனம் இருந்தால்
கழுதையும் உயரும்

என்றெலாம் எண்ணம்
தினகர் நெஞ்சில்
நின்ற படியே
நெட்டி முறித்தான்!

அந்த நேரம்-
பந்தலின் ஓரம்-
குந்தி இருந்தோர்
குதித்தெழுந் தோடினர்!

"ஐயோ நெருப்பு
அதோபார் சில பேர்
கையில் பந்தம்!
கிளம்பு ஓடு!
ஐயோ ஐயோ!
கடவுளே ஈஸ்வரா!"
மெய்யாய்த் தீதான்
மேடையின் பக்கமும்
"பானு கமலா
ஓடி வாங்க
ஜானு அத்தை
சட்டுன்று ஓடுங்க!"
வேதனைக் குரல்கள்!
விதவித அலறல்கள்!

மாதர், குழந்தைகள்
பந்தலை விட்டு

நாக்குழறக் கத்தி
நாலா புறமும்
திக்குத் தப்பிச்
சிதறி ஓடினர்!
தீயை மூட்டியத்
தீயோர் கும்பல்
தாயை மகளைப்
பேத மின்றி
விரட்டிப் பிடித்தது
வெறியுடன் கவ்விப்
புரட்டி எடுத்துப்
பொல்லாங்கு செய்தது!

கார்களை நொறுக்கினர்
கற்களை வீசினர்!
பேர்களைச் சொல்லிப்
பிரமுகர்களைக் குத்தினர்!
சாத்திர தர்ம
தேச விரோதிகளால்
ஆத்மிக சமாஜம்
அக்னிப் பசிக்கே
ஆகாரம் ஆக
ஆரம் பித்தது!

வேகாத இரும்பு
விட்டங்கள் கூட

கோவைப் பழமாய்ச்
சிவக்கத் தொடங்கின!
தேவை கிடைத்ததோ?
தினவு தீர்ந்த தோ?
தெரிய வில்லை
தாவிய காவலர்
கரியும் பந்தலைச்
சூழ்வதற் குள்ளே
காலிகள் குண்டர்கள்
கம்பி நீட்டினர்!

மூலையில் தீயில்
சிக்க விழுந்த
சமாஜத் தலைவரைக்
காத்த தினகரை
'கமான் சார்!'' என்றே
கவ்விப் பிடித்தக்
காவலர் செய்கை
வியப்பிலும் நகைப்பு!
'பாவம்' ஓடிப்
பதுங்கிக் கொள்ளப்
'புண்ணியம்' அக்கிரமப்
பழியை ஏற்றது!

'உண்மை' யும் அங்கே
ஊமை ஆயிற்றே

தலைப் பேருரை
தந்திட வந்தப்
பண்பாட்டு அமைச்சரின்
'கெடிலாக்' கும் நொறுங்கி
கிடந்தது அங்கே.
அவரையும் காணோம்!

படத்துறை அதிபர்,
பேங்கர் மனைவி,
இன்னும் அன்னிய
தூத ரகத்துக்
கன்னிப் பெண்கள்,
கல்லூரி மாணவிகள்
அத்தனைப் பேர்களையும
மொத்தமாய்க் காணோம்!
குத்துப் பட்டவர்
தொகையும் அதிகம்.
அருளும் பண்பும்
அழுது துடிக்க
இருளில் புகையில்
இரவு ஊர்ந்தது!

துர்க்கைக் கோயிலில்
சரஸி மட்டும்
அர்ச்சகர் வராததினால்
ஆயாசம் கொண்டாள்!

வழக்கம் இல்லா
வழக்கமாய் அன்று
'புழுக்கம்' ஒன்று
மனத்துள் புகுந்து
அவளை ஏனோ
அலைக்க ழித்தது!
தவணைக் கடையுடன்
ஆராதனைத் தொழிலும்
இணைத்துச் செய்த
ஈஸ்வர குருக்கள்
பணத்தின் நிழலில்
பராமார்த் திகத்தைக்
கொண்டு வந்தே
குடிவைத் திருப்பவர்!

அண்டை அயலார்
'கதைகள்' கட்டியும்
சனிக்கி ழமைகள்
தோறும் சரஸி
இனிக்கக் குளிர
அர்ச்சனை செய்வார்
இஷ்ட தெய்வ
நாமம் சொல்லி
அஷ்டோத்திர சகஸ்ர
நாமமும் செய்வார்
சரஸி என்னும்

பரத்தை தொட்டால்
கரன்ஸியில் மேனியில்
தீட்டா படியும்?
கெட்டிச் சிவப்பு
குங்குமத் தோடு
தட்டு நிறையைச்
சர்க்கரைப் பொங்கலும்
பூவும பழங்களும்
தவறாமல் கொடுப்பார்!

ஆவல் பரவசம்
ஆட்கொள சரஸி
பிரசா தங்களைப்
பெற்றுக் கொண்டு
இரண்டு ரூபாய்கள்
தட்சணை கொடுப்பாள்!
ஐம்பது பைசாக்களே
அர்ச்சனைக் கூலி!
'ரொம்ப அதிகம்
கொள்ளை!" என்றே
வம்பு பேசும்

வட்டாரத் திலேயே
'பொம்பளை' ஒருத்தி
'போக்கு கெட்டவள்'
முழுசாய் இரண்டும்

மூன்றும் தருவதைப்
பொழுதெல்லாம் சொல்லிப்
புகழ்வார் சரஸியை!

பிற்பகலில் செய்த
எண்ணெய் முழுக்கு
அற்ப விஷயமாய்
சகத்தொழிற் காரிகள்
பிரச்னை யாக்கி
ரஸாபசம் செய்தது
இப்படிப் பலவும்
அவளை அசத்திட
சோர்ந்தே பக்கத்
தூணில் சாய்ந்தாள்

ஊர்ந்தது வேளை!
அர்ச்சகரும் வந்தார்!
“அடடா தூங்கி
விடாதே சரஸி
கடவுள காப்பு
மாநாடு போனேன்
அதனாலே தான்
லேட்டா யிடுத்து!”
லோட்டாக் குரலில்
சொல்லி விட்டு
ஆடி அசைந்தே
அர்ச்சனை செய்தார்.

வாடிக்கை யான
பிரசா தத்துடன்
சீடை முறுக்குகள்
சிறப்பாய் வழங்கினார்.
கூடையி லிருந்தே
ஆரஞ்சும் கொடுத்தார்.
"என்னமோ போல
இருக்கியே?" என்றார்
"ஒண்ணு மில்லே
சாமி!" என்றாள்.

வேறு சிலரும்
வந்து போயினர்
ஆறோ ஐந்தோ
கிடைத்ததை எண்ணினார்.
குருக்கள் புறப்பட
ஆயத்தம் ஆனார்.
சரஸியும பிரசாத
வகைகளை எல்லாம்
மறுநாள் காலை
அருந்தி மகிழ்ந்து
பஜனை முடிக்க
புதுவெள்ளி வாளியில்
போட்டுக் கொண்டு
மெதுவாய் நடந்தே
பிரகாரம் சுற்றினாள்.

அப்போது தான் அக்
கோயிலுக் குள்ளே
திடுதிப் பென்றே
பெண்டிர், ஆடவர்
பலரும் இரைக்கப்
படபடப் புனே -
அலமலப் புடனே -
ஓடி வந்தனர்.
அடுத்த டுத்தே
இன்னும் சிலபேர்கள்,
நடுத்தர வயதில்
நாலைந்து ஸ்திரிகள்,
இருபது பேர்க்குமேல்
இளம்பெண் கூட்டம்
அரைமணிக் குள்ளே
கோயிலே நிறைந்தது!

வந்தவர்க் குள்ளே
அமைச்சர் இருந்தார்!
வெந்த சமாஜ
விபத்தில் தப்பி
தொடர்ந்து விரட்டிய
காலிகளுக் கஞ்சி
அடைந்தனர் கோயில்!
அடைத்தனர் கதவை!
வெளியே இரைச்சல்

விஷமிகள் இருப்பதைத்
தெளிவாய்க் காட்டத்
திகிலில் குமைந்தனர்!

‘வந்தவாள்’ எல்லாம்
‘பெரியவாள்’ என்பதை
அந்தக் கணமே
அர்ச்சகர் உணர்ந்தார்!
“அம்பிகை இருக்கா!
பயப்படா தீங்கோ!
நம்புங் கோண்ணா!
நாசக்காரப் பாவிகள்
இங்கெதுக்கு வரான்கள்
டிரபிள் இருக்காது!
பொங்கல், பால்பழம்
சாப்பி டுங்களேன்
தீர்த்தம் வேணுமோ! ”
என்றுப சரித்தார்

வேர்த்த உடம்புகள்
விதிர்த்த உடம்புகள்
சற்றே ஓய்வு
கொள்ளத் தொடங்கின!
நெற்றியில் சிறிய
காயத் தோடு
அமைச்சர் தப்பினார்

என்பதை அறிந்து
சமயம் பார்த்து
சிறப்பு அர்ச்சனை
செய்து அம்பிகை
பிரசாதம் கொடுத்தார்!
கைகால் அசைக்கும்
பொம்மை யாக
அமைச்சரும் அதனை
வாங்கிக் கொள்ள
வந்தவர் எல்லாம்
வாழ்த்தினர் அவரை!

சர்க்கரைப் பொங்கலும்
வாழைப் பழங்களும்
முறுக்கு சீடைகள்
குருக்கள் கொடுக்க
ஒருசிலர் வாங்கி
உள்ளே தள்ளினர்!
வெறும்வயிற் றுடனே
மற்றவர் களைத்து
விடியும் வேளைக்காய்க்
காத்துக் கிடந்தனர்!

கொடியோர் இன்னும்
கோயில் அருகிலே
இருப்பதை அவர்கள்

சீழ்க்கை ஒலியே
உறுதி செய்தது!
கால்துறைக்கு
வேறு இடங்களில்
போக்குக் காட்டி
தாறு மாறாய்
அலைய வைத்தனர்!
எப்போது போவது?
எப்படிப் போவது?
இப்படி எண்ணி
அஞ்சிக் கிடந்தனர்!
எந்த இடத்திலும்
கேலி செய்யும்
மாணவிகளும் அடங்கி
மௌனம் ஆயினர்!

கோணல் மூக்கு
பேங்கர் மனைவி
பருவதம் மட்டும்
பார்வையைச் சுழற்றினாள்.
அருவருக்கத் தக்க
வஸ்து எதையோ
மிதித்து விட்டவள்
போலே சிணுங்கினாள்

“உதைத்து நாயை
வெளியே விரட்டுங்கள்”

என்றே தன்னையும்
மறந்தே கத்தினாள்!
நின்றவர், படுத்தவர்
அமைச்சர், அர்ச்சகர்
யாவரும் அஞ்சி
அவளிடம் வந்து
மோவாயைச் சொறிந்து
"என்னம்மா விஷயம்?"
என்றே கேட்டனர்.

கத்தல் கேட்டு
ஆட்கள் வந்தால்
ஆபத் தென்றே
பருவ தத்தையும்
பயப்ப டுத்தினர்.
திருவாட்டி பேங்கரின்
சீற்றம் மிகுந்தது!
குறிப்பாய் குருக்களை
முறைத்துப் பார்த்து
கேலியாய்த் திட்டினார்
பருவதத்தின் கணவர்
பேங்கர் கைலாசம்
துர்க்கைக் கோயிலின்
அறங்காவல் தலைவர்!

அரச - புரசலாய்க்
கைலாசம் காதில்

சரஸி குருக்கள் -
சாமான்யத் தொடர்பை
'மூக்கு முழி'யுடன்'
கதையாய்த் திரித்து
'நாக்கு வம்பர்கள்'
போட்ட துண்டு
சல்லாப சரஸியைப்
பருவதம் வெறுக்க
இன்னுமோர் காரணம்
இருந்தது வலுவாய்!

குத்தும் மார்பகம்
குறுகிய பார்வை
முத்து முறுவல்
இத்யாதி சகிதம்
இளமையில் சரஸி
இருந்த போது
பணிப்பெண் ணாக
இருந்த இடமே
பேங்கர் வீடுதான்!

கைலா சத்தின்
காரிய தரிசி
மெய்யப்பன் தம்பி
முருகப்பா என்பவன்
சத்தம் இன்றி

சரஸியை வளைத்து
கொத்து இளமையைக்
குத்தகை எடுத்தான்!
முருகப் பா'வின்
'தனிஉடை மை'யை
இருளப்பன் என்னும்
பேருந்து ஓட்டி
'பொதுஉடை மை' யாக
ஆக்க முனைந்தான்!

ஊர்க்குள படித்துறை
போல சரஸி
ஆக்கப்பட்ட
ஆரம்பம் இதுதான்!
ஈக்கள் மொய்தால்
அழுகல் இருக்குமே?
ரகசியம் வெடித்தது
இரவுக் கிரவே
முன்அறிவு படைக்க
பருவதம் சரஸியை
வெளியே விரட்டினாள்!

ஐந்து ஆண்டுகள்
ஆன போதும்
சட்டென பார்வையால்
சரஸியை யாரெனக்

கண்டு கொண்டாள்
பருவதத் தம்மாள்.
'ஒண்ட வந்தவள்'
'ஊர்ப் பிடாரி' ஆனாள்!

தனது மாஜி
எஜமானி தன்னை
மனது குழம்பிய
அந்நே ரத்திலும்
கும்பலுக் குள்ளே
கண்ட சரஸியும்
வெம்பிக் குறுகி
வெளியே ஓடிட
முயலும் போது
சளிசிந்தப் போன
மாணவி ஒருத்தி
அவளையும் அடைக்கலம்
புகுந்தவள் என்றே
தவறிய்க் கருதித்
தடுத்து விட்டாள்!

அந்த மாணவி
தந்த தகவலில்
பந்தல் எரிந்ததும்
பாதகர் விரட்ட
அடைக்கலம் புகுந்த

அவர்களைப் பற்றி -
அறிந்தாள் சரஸி.
இடைஇடையே தீயோர்
இம்சை பற்றி
கேட்டுக் கொண்டாள்.
கிலியும் கொண்டாள்!
நீட்டிய கையில்
நெருப்பு பட்டதுபோல்
தன்னைக் குறுக்கித்
தனித்துக் குந்தினாள்!

என் செய்தும்
இக்கட்டாய் ஆச்சு!
இடுப்பிலும் முதுகிலும்
கூடக் கண்கள்
படைத்தவள் அல்லவா
பருவதத் தம்மாள்!
பரத்தைக் கழுதையைப்
பார்த்து விட்டாள்
தரத்தில் குறைந்த
தாசியுடன் தங்கினால்
நாளை கௌரவம்
நாறி விடாதா?
வேளையை மறந்து
விஷத்தைக் கக்கினாள்!

சரஸி - பருவதம்
தகராறு முற்றினால்
அரசியல் வம்புகள்
ஏதேனும் வருமோ?
'மஞ்சள் பத்திரிகை'க்
காரர்கள் தன்னைக்
கஞ்சியாய் நாளை
ஆக்கு வாரோ?
என்று அஞ்சிய
அமைச்சர் பொதுவாய்
சரஸியை நீங்களே
அமுக்க மாக
பேசிமுடித்து
பிரச்னையை தீருங்கள்
என்றே அங்கு,
சிந்தனையில் இருந்த
படமுத லாளியிடம்
சிசுகி சுத்தார்!

இடமும்காலமும்
மறந்து விட்டு
'சரஸியைப் பார்த்த
படாதி பதிக்கு
'தராசு விழிகள்'
எனும்தன் படத்தில்
சமூக நோய்களுக்கு

வைத்தியம் செய்வதாய்
அமைந்தி ருந்த
குறுகிய காலப்
புரட்சிப் படைப்பில்
வருகிற நாயகி
நினைவு வந்தது!

பட்டுப் புடவைக்
குள்ளிருந் தாலும்
கெட்டுப் பழகிய
தோஷம், சரஸியை
'சாக்கடை மோகினி'
என்பதைக் காட்ட -
மூக்கு வியர்த்து
மூளை சுழன்ற
படாதி பதியோ
பேசா திருந்தார்.

குருக்களோ மனசுக்குள்
குழப்பம் சூழ
மந்திரம் ஓதியே
நேரம் கடத்தினார்!
வந்தி ருந்த
மற்றவர் களுக்கோ
இந்த நாடகம்
எதுவும் புரியவில்லை!

ஆணும் பெண்ணும்
ஏகமாய் சரஸியைச்
சூழ்ந்து கொண்டனர்.
நெரிசலில் சிக்கிய
பிரசாத வாளியை
சரஸியும் கீழே
தவற விட்டாள்.
மூடி கழன்றது.

முறுக்கும் சீடையும்
ஜோடி சேர்ந்தது!
பழங்களும் சிதறின!

அழுது தூங்கி
எழுந்த குழந்தை
ஒன்றின் விழிகளில்
உருண்ட சீடைகள்
தென்பட்டு விட்டன!
"அம்மா மம்மு!
அம்மா மம்மு!
அம்மா!" என்றே
அலறத் தொடங்கியது!

குழந்தையின் அழுகையால்
அதிர்ந்த சரஸி
விழுந்த சீடைகள்

பழங்களைப் பொறுக்கிக்
குழந்தையின் கையில்
கொஞ்சிய படியே
கொடுக்க வந்தாள்.
அடுத்த விநாடி
வெடுக்கெனப் பிடுங்கி
சீடையை எறிந்து
வீசினாள் பருவதம்!
ஆறேழு அறைகள்!
அடிமேல் உதைகள்!
தாக்கு தலாலே
சரஸி நடுங்கினாள்!

நாக்கு என்பதும்
நட்டுவாய்க் கிளியோ?
"எச்சில் நாயே
என்ன திமிரடி
பச்சைக் குழந்தையின்
பக்கம் நீ தான்
வருவதே பாவம்!
பழமும் பட்சணமும்
தரவும் துணிந்தால்
தெய்வத்துக் கடுக்குமா?"
மேலும் உதைத்தாள்,
குன்றுக் குட்டியாய்
நகரும் பருவதம்!

பெற்றவ ளுக்கில்லா
பாபமும் தீட்டும்
மற்றவருக் கில்லா
மாசும் அழுக்கும்
அறுபது எழுபது
இலட்சங் களுள்ள
வீடுகள் மனைகள்
ஏராளம் உள்ள
பேங்கர் மனைவிக்கு
வந்து விட்டன!

ஏங்கிய குழந்தை
அழுதது! மீண்டும்
'கசமுசா' வென்ற
பேச்சு வலுத்தது!
"கசமாலம் 'பீடை'
இதுஏன் இங்கே
இப்போது வந்தது?"
என்றெல்லாம் ஏச
அப்படியே சரஸி
அதிர்ந்து நின்றாள்
கும்பிட வந்த
கோயிலில் கூட
வம்பிது வந்ததால்
வெம்பினாள், நொந்தாள்!

அந்நே ரத்தில் -
பிரகார வாசலின்
கதவை பலமாய்
யாரோ இடித்தனர்!
“திறந்திடு கதவை!
வெளியே வா வா!
அதிர்ந்த குரலில்
அதிகாரம் இருந்தது!
குரலின் தோரணையே
குறிப்பு தந்தது!
விரல்சொடுக்கும் நேரத்தில்
விஷயம் புரிந்தது!
வெளியே நிற்பவர்
விரோதி கள்தாம்!
துளிதாம தித்தாலும்
தூளாகும் கதவுகள்!

மான்விழி மாணவி
ஒருத்தியின் அழகில்
தேனுண்டு கிடந்த
இளைஞன் ஒருவன்
பயமின்றி அவர்களுடன்
பேச லானான்!

தேச விரோதிகள்;
தீயோர் ஐவர்

வாசம் பிடித்து
வந்து விட்டனர்;
இளைஞன் கெஞ்சலாய்க்
கெஞ்சினான் அவர்களை!
"களைத்து மயங்கி
உள்ளே கிடப்பவர்
குழந்தைகள் தாய்மார்
கிழவர் களேதாம்!
விழுந்ததைக் கூட
எடுக்காமல் வந்தோர்
நகையோ நட்டோ
பணமோ பண்டமோ
வகையாய் எதுவும்
இல்லை!" என்றான்.

வெளியே இருந்தவர்
வெடிச்சிரிப் புதிர்த்தனர்!
"அளக்கி றாயா!
மச்சான் டேக்கர்!
எல்லாம் தெரியும்,
எழுபது லட்சம்
உள்ளே இருக்குடா!
வெளியே விரட்டு!
இல்லை, கோயிலை
இரண்டே நிமிஷத்தில்
சல்லி சல்லியாய்

வெட்டியால் தகர்ப்போம்
ஒடு சீக்கிரம்
'தண்ணி காட்ட'
நினைக்காதே நைனா!"
என்று சொல்லி
இளைஞனை அழைத்து
'கொன்று விடுவோம்'
என்றும் மிரட்டி
பேரம் ஒன்றைப்
பேசி அனுப்பினர்!

காரம் குறைந்தது!
கால்நடை தளர்ந்தது
குருக்க ளிடமே
கூறினான் அந்த
அரக்கர்கள் கேட்கும்
அதிகாரப் பரிசை!
எல்லோரும் கூடி
ஏதேதோ பேச
வல்லூறு புறாவை
விட்டது போல,
சரஸியை விடுத்து
சங்கதி அறிய
பருவதம் வந்தாள்
பரபரப் புடனே!

படாதி பதிதான்
பட்டெனச் சொன்னார் :
"இடிமேல் இடிதான்!
அம்மா நீங்கள்
இங்கே இருப்பதை
எப்படியோ அவர்கள்
சந்தேகம் இன்றித்
தெரிந்து கொண்டனர்!
பேங்குக் காரியைக்
கொண்டுவா என்றால்
நாங்கள் என்ன செய்வது?
தவறினால் வெடியால்
கோயிலே இடியும்
முடிவைச் சொல்லுங்கள்..."
என்றே இழுத்தார்.
கேட்ட பருவதம்
கிடுகிடுத்துப் போனாள்!

வாட்ட சாட்ட
உடம்பு நடுங்க
"எப்படி யேனும்
என்னைக் கடத்தி
அப்படி இப்படி
பேரம் பேசி
முப்பது நாற்பது
இலட்சம் என்று

கைப்பற்றவேதான்
வந்து விட்டனர்!
கயவரிடம் சிக்கினால்
கட்டாயம் எனது
உயிரும் மானமும்
உடமையும் இழப்பேன்!
இதைக்கொடுத் தாவது
ஏதாவது செய்யுங்கள்
வதைசெய்ய விடாதீர்!"
என்றே அழுது
வைர அட்டிகையைக்
கழற்றிக் கொடுத்து
"ஐயா போங்கள்
தாமதம் வேண்டாம்"
என்றே இளைஞனை
வேண்டிக் குழைந்தாள்
குன்றும் குனிந்தே
குரலிட் டழுததுபோல்!

மதிலுக்கு வெளியே
இருந்த அவர்கள்
கதவை இடித்தனர்!
கத்தினர்; கூவினர்!
இளைஞன் மெதுவாய்
அட்டிகை அதனை
கதவிடுக்கு வழியே

நுழைத்துத் தள்ளி,
"தேடிய நபர்தான்
இங்கே இல்லை!
ஓடிப் போங்கள்
புண்ணிய மாகும்!"
என்று கெஞ்சினான்!
எதிரிகள் குமுறி
"பன்றியே ஏய்க்கிறாய்!
கொலைவிழும் ஜாக்ரதை!
உடனே கோயிலின்
உள்ளே ஓடு!
மடமட வென்றே
இரண்டு செருக்கிகளை
இழுத்து வா இங்கே!
எங்களுக்கு வேண்டும்!
தள தளவென்று
தளும்பும் உடம்புடன்
எவள் கிடைத்தாலும்
இழுத்துவா உடனே!"
என்றே இளைஞனை
அதட்டி விரட்டினர்!

இன்று அவன்தான்
இப்போ தவன்தான்
சிக்கலில் பெரிய
சிக்கலில் மாட்டினான்!

மக்களின் துரோகிகள்
மனிதப் பதர்கள்
இப்போது கேட்கும்
"இரை"யைப் பற்றி
எப்படியோ குளறி
பெரியவர் களிடத்தே
பேசிமுடித் தான்!
எரியும் நெருப்பை
எடுத்து விழுங்க
நேர்ந்தது போல
நடுங்கினர் நெஞ்சம்!

தீர்ந்த கணக்கைத்
திருப்பி எழுதிப்
பொன்னைப் பெற்றது
போதா தென்றே
பெண்களைக் கேட்கும்
பேய்வெறிக் கொடுமையை
எண்ணி மயங்கி
எல்லோரும் குழம்பினர்!
கண்ணிய வான்கள்
புண்ணிய வான்கள்
நினைத்துப் பார்க்கவே
கூசும் பரிட்சையை -
அனைத்திலும் மோசமாம்
அவக்கே டொன்றை

வென்றிடும் வழிதான்
விளங்கி டாமலே
நின்று கலங்கி
யாவரும் துடித்தனர்!

எந்தப் பெண்ணைப்
பலியாகக் கொடுப்பது?
வந்திருக் கின்ற
வனிதையர் களுள்ளே
இரண்டொரு வர்தாம்
கணவரோ டிருந்தனர்!
அரண்டும் அலறியும்
வந்திடும் போது
உறவைத் துணையாய்ப்
பிரிந்தவர் தாமே
பறந்து வந்தே
கோயிலில் பதுங்கினர்!
ஒருத்தியை அனுப்பும்
உரிமை கூட
பொருத்தமாய் அங்கே
எவர்க்குமே இல்லை!

அதனால் செய்தியை
ஆடவர் செவிகளில்
மெதுவாய்ச் சொன்னான்
அந்த இளைஞன்!

பருவதத் தம்மாள்
படாதிபதி யிடம்போய்
அருவருக்கத் தக்க
அந்தச் செய்தியைக்
கேட்டே திகைத்தாள்!
"வந்தது பேரிடி
வந்ததே!" என்றாள்.
கதவை இடிக்கும்
சத்தம் மீண்டும்
அதிகமாய்க் கேட்டது.
அதனைத் தொடர்ந்தே
ஏதோ வெடிகள்
உமிழும் ஓசை!
பாதகர் லிலையின்
பட்டியல் நீண்டது!

கிணற்று நீரை
மொண்டு கழவ
துணையாய் மாணவி
ஒருத்தி அழைக்க
முன்னால் சரஸி
சென்றால் அங்கே,
பின்னால் குருக்களும்
புரோகிதர் ஒருவரும்
பேசிக் கொள்வது
தெளிவாய்க் கேட்டது!

கூசி நடுங்கினாள்
குமாரி மாணவி!

அதற்குள் ளேயே
இன்னொரு தடவை
கதவை இடிக்கும்
குண்டர் களாலே
விரட்டப் பட்டு
மிரண்ட இளைஞன்
வந்தான் பதறினான்!
"சரியாய், கடைசியாய்
பத்தே நிமிஷத்தில்
செருக்கிகள் வேண்டும்!
தயங்கினால் மறுத்தால்
கூண்டோடு கைலாசம்
போய்ச்சேர் வீர்கள்
ஏண்டா கண்ணு
இங்கே நிக்கறே?"
என்றே அவர்கள்
எச்ச ரித்ததை
மென்று குமுறி
மொழிந்தான் இளைஞன்!

அதற்குள் மீண்டும்
ஆவேச மாக
கதவையே நொறுக்கத்
தொடங்கி விட்டனர்!

மதிலோ உயரம்!
கதவோ இரும்பு!
அதனா லேயே
அப்பா தகர்கள்
இதமாய் மிரட்டி
பேரம் பேசினர்
போலீஸ் வராதா?
பொழுது விடியாதா?
காலிகள் பிடிபட
வாய்ப்பே இல்லையா?
என்றே அனைவரும்
ஏங்கித் தவித்தனர்!

கன்று பசுவை
அணுகுதல் போல -
சரஸி சன்னதி
வந்து தேவியை
இருமுறை வணங்கினாள்!
இருகரம் கூப்பினாள்!
அடுத்து அர்ச்சகர்,
அமைச்சர், புரோகிதர்
படுத்துக் கிடந்த
படாதிபதி யோடு
பருவதத் தம்மாள்;
பாக்கியுள்ள பெண்கள்
ஒருத்தரை விடாமல்
ஒருமுறை வணங்கினாள்

இளைஞனை மட்டும்
தன்னுடன் வாவென
விளித்துக் கதவுப்
பக்கம் நடந்தாள்...

கோயிலில் இருந்தவர்
வாய்கள் அடைத்தன!
எல்லோர் கண்ணிலும்
பொங்கிற்று வெள்ளம்!
பருவதம் கூட
விக்கி விம்மினாள்!
இருந்தவர் அனைவருக்கும்
இராத ஒன்று
நெஞ்சினுள் புகுந்து
நெருடியது எதையோ?

அஞ்சிய ஆபத்து
அப்பால் சென்றது
ஆயினும்... ஆயினும்...
அனைவரும் மொத்தமாய்
நேயமாய் பந்தமாய்
நெருக்கமாய் உயிர்ப்பாய்
பிணைந்த ஒன்றை
பிரிந்ததே போல -
அணைத்த தென்றலை
அகற்றினாற் போல -

எல்லோர் உணர்வும்
ஏக சுருதியை
'சொல்லாத சொற்களில்
தோய விட்டது!
துர்க்கையைப் பார்த்துத்
துதித்தாள் பருவதம்!
துர்க்கையின் முகமும்
இருளாய்க் கிடந்தது!
அவள்திரு முன்னாள்
அன்று நடந்த
அவல நாடகம்
முடிந்தது போலும்!

கோயிலின் வாசலை
இருவரும் அடைந்தனர்!
தாய்போல் சரஸி
சைகையால் அவனைத்
தன்பால் அழைத்தாள்
இரகசிய மாகத் -
"கதவைத் திறக்கவே
திறக்கா தீர்கள்!"
என்று சொன்னாள்.

வெளியே இருந்தவர்
அவசரம் காட்டினர்
இளிப்பும் களைப்பும்
ஏக்கக் குரலில்

மிருகம் ஒன்று
மனிதக் குரலில்
"சரக்கு எப்படி?
இளசா? கிழடா?"
என்று கேட்டது.
"உம் உம்!" என்றது.
கரங்களைக் குவித்தாள்!
இளைஞனையும் வணங்கினாள்.
மரப்பலகை ஒன்றினால்
மதிலில் ஏறி
அப்பால் குதித்தாள்
சரஸி! இளைஞன்
இப்பா லிருந்தே
வாய்விட் டழுதான்

விடிந்தது அந்த
விபரீத இரவு!
அடைந்து கிடந்தவர்
வெளியேற லாயினர்!
பந்தல் எரிப்பில்
காணாமற் போன
அந்த நகர
பிரமுகர் களான
இருபது பேருடன்
அமைச்சரும் கோயிலில்
இருப்பது அறிந்தே
காவலர் வந்தனர்.

அதற்குள் ளாக
பிரகாரச் சுவரின்
கதவுக் கெதிரே
மரத்துக் கடியில் -
அலங்கோ லமாக
ஆடையே இன்றி
சிலைபோ லொருத்தி
பிரேத மாகக் -
கிடப்ப தாக -
யாரோ கூறினர்!

பருவதம் உள்பட
பெண்டிர் கூட்டமும்
அர்ச்சகரும் உடனே
அப்பக்கம் ஓடினர்!
மந்திரியும் அவர்களை
முந்திக் கொண்டார்!
சரஸி அங்கே
சருகாய்க் கிடந்தாள்
'புதிய தெய்வ'த்தைப்
பிரதிஷ்டை செய்தே
உதய சூரியன்
ஆரத்தி எடுத்தான்!





எனது மாணவ ஆசான் வ.கோ.சண்முகம்
சிறந்த தமிழ்தும்பி ,கோமல் ரங்கசாமியான என்னை
அரங்கண்ணல் ஆக்கியது அவர்தான்.
அவருடைய விடுதான் எங்கள் குகை.
திருவாரூர் சாமா, திருக்குவளை கருணாநிதி,
விஜயபுரம் செல்லக் கணபதி, குளக்கரை சீனுவாசன்,
மற்றும் நான் உட்பட இந்த மாணவப் பட்டாளம்
இந்தத் தமிழ்க் குகையில்தான் அடிக்கடி கூடும்.
வசதியான வாழ்வு அப்போது வ.கோ.சண்முகத்துக்கு
அமையாதிருந்தால் இன்று அவர்
கவிஞருள் கவிஞராகவோ
அல்லது இன்னொரு கருணாநிதி யாகவோ
இருந்திருக்கக் கூடியவர்.

*இராம.அரங்கண்ணல்*

(சுரதா– பொங்கல் மலர் – 19